இ-ள். (அகங்காரமுநீயல) அகங்காரமுநீயன்று என்னதென்றால் இடரின்புளதாய்) துன்பத்தையேயின்பமாகவுடையதாய் (நிலையற்று நிலைபெற்ற குணமிலாததாய் அறிவற்று) அறிவிலாததாய் (எண்ணுங்கரணங்களிலாய் எண்ணப்பட்ட கரண நான்குள் இதுவுமொன்றாகி எவரும்) யாவரும் (அடரும்பிறவிக்கடியென்று வருமென்றறியே) நெருங்கவந்து சணிக்குஞ்சனனத்திற்கு ஆதிநானென்று வருகின்றதென்றறிவாய்-எ-று. (௫௪)

கவி. ஐயப்படலோர் பொருணிச்சயமாய்
அறியப்படல் யானெனதென்றும் தம்
செய்யப்படல் செய்வது சிந்தனையாம்
சித்தம்மதுவன்றென நீதெளியே.

க-து. மித்தையை யானென தென்ற விகாரமாம்
சித்தமுமன்றெனத் தெளியவுரைத்தது.

இ-ள். (ஓர்பொருணிச்சயமாயறியப்படலையப்படல்) ஒருபதார்த்தத்தை மெய்யெனவறிதலும் அதில்சந்தேகப்படுதலும் (யானெனதென்று மகஞ்செய்யப்படல்) யானென்றும் என்னதென்றும் எவற்றிலுஞ் செருக்கையுண்டாக்குதலும் (செய்வது சிந்தனையாம்) இவைகளைச்செய்விக்குஞ் சிந்தனையாகிய சித்தம்மதுவன்றென நீதெளியே) சித்தமானது நீயல்லவென்று அறிவாய்-எ-று. ௫௫

அ-கை. பஞ்சபூதவிகாரமாகிய தேகமுதல் சித்தபரியந்தமும் நீயல்லவென்றவர் நின்னதன்றென்பதையுமேலருளிச்செய்கின்றார்.

கவி. முன்னாகவுடம்பது சித்தமதேமுடிவாக
மொழிந்த பொருட்டிரடான்



நின்னாகிலநீ யறியும்பொருளாய்
நிகழ்கின்றதனா லெனநின்மலனே.

க-து. தனுகாதி சகலமுமோர்ந்து
நினைவாலறிவது நினதலவென்றது.

இ-ள். (உடம்பதுமுன்னாக சித்தமதேமுடிவாக) உடலினைக் குறித்துச் சொன்னஎனதாடைபொன்பூவென்ற செய்யுள்முதலாக சித்தத்தைக்குறித்து முடிவிலேசொன்னஐயப்படலென்ற செய்யுளீறாகப்பதினாறு செய்யுளினாலேயும் (மொழிந்தபொருட்டிரடான்) சொல்லிக்கொண்டுவந்த அர்த்த சமுகங்களெல்லாம (நீயறியும் பொருளாய்நிகழ்கின்றதனால்) உன்னாலேயறியப்பட்டபதார்த்தமாய் விளங்குகையினாலே (நின்னாகிலவெனநின்மலன்) அறிவுமயமாய் விளங்குகின்ற ஆத்மாவாகிய வுன்னதல்ல வென்றார் மலரகிதரானநந்திபராயணமுனிவர்-எ-று. ௫௬

அ-கை. தனுகரணாதிக ணீயுமன்று நின்னதுமன்றென்ற ஆசாரியரைநோக்கி மாணாக்கன்விண்ணப்பஞ்செய்வதை மேலருளிச்செய்கின்றார்.

கவி. உன்னாலறியப்படும்யாவையுமுன்
னுயிரன்றெனவோ தினையொக்குமெனச்
கென்னாலறியா தொழியும்பொருளோ
யானாகுவதென்றன னென்றலுமே.

க-து. நீயரியும்பொரு ணீயலவென்றனை
நாயேகொத்தது நானொன்றது.

இ-ள். (உன்னாலரியப்படும் யாவையும் முன்னுயிரன்றெனவோதினை) உன்னாலே பகுத்தரியப்பட்டவையாவும் உன்னுயிரல்லவென்று தேவரீர்திருவாய்மலர்ந்தருளினீர் (எனக்கொக்கும்) அவைஅடியேனுக்குச் சமாதானமாக

விருக்கின்றது அனால் என்னாலரிய தொழியும்பொருளோ யனுகுவதென்றனன் என்னாலே யரிதற்கரிதாதியபொருளோ (நானுகின்றதென்றனன் என்றலுமே) இப்படிசொல்லவே மாணுக்கனைநோக்கிமேலருளிச்செய்கின்றார்-எ-று

அ-கை. காரியகாரண மித்தன்மையுடைய தென்பதை மேலருளிச்செய்கின்றார்.

கவி. அரியாப்பொருள்காரணமாகைகுரித்
தரியும்பொருள் காரியமாமூலகில்
நெரியாற்றிகழ் நான்மறையர்தமெலாம்
நீயன்றெனவோது நிரந்தரமே.

க-து. காரியமன்றுநீ காரணமாமெண
ஆரியன்மகிழ்வோ டடிமைக்குரைத்து

இ-ள். (உலகிற்குரித்தரியாப்பொருள் காரணமாகை) உலகத்தினிடத்திலே ஒரு சுட்டுதலினால் அரிவதற்குஅரிதாகிய பொருளானது காரமணமாகுகல்-அவையெவையெனில் மூலகாரணமானபிரமம் (உலகிற்குரித்தரியும் பொருள்காரியமாம்) உலகத்தினிடத்திலே மதித்தரிகின்ற பொருளானது காரியமாகுகல்அஃதெவை யெனில் தேகாதிப்ரவஞ்சம் ஆகையால்(நெரியாற்றிகழ் நான்மறையுந்தமெலாநிரந்தரநீயன்றெனவோது) நன்மார்க்கத்தாற் பிரகாசம் பொருந்தியநான்குவேதத்தின் முடிவுகளெல்லாம் எப்போழ்துத்தேகாதிப்ர வஞ்சமான காரியமாகுதலேநீயன்றென்றுசொல்லுகின்றது எ-று—உலகுருரித்த என்பதைஇரண்டிடத்துங்கூட்டுக. ௪௮

அ-கை. பிரமசைதன்னியத்தைக் கட்புலனு லரியத்தக்கதன்றென்று மேலருளிச் செய்கின்றார்.



கவி. அரியும்பொருளன் றரியாப்பொருளன்
றரிவாகிய நீயெனு மப்பொருடான்
பொரியின்வழிநின் றறியும்பொருளோ
போதக்கண்விழித் தறியும்பொருளே.

க-து. ஊனநோக்கத்தி லுணர்ந்தறியாப்பொருள்
ஞானநோக்கத்தில் நாடுவதென்றது.

இ-ள். (நீயென்றும் அறிவாகிய வப்பொருடான்)நீயென்றுசொல்லபட்ட அறிவாகிய அந்தப் பொருளானது—(பொறியின்வழி நின்றறியும் பொருளோஅறியும்பொருளன்ற) சுரோத்ராதி ஞானப்பொறியின்வழியாக நின்றறிகின்றபொருளா-அரிகின்றபொருளல்ல (போதக்கண்விழித்தறியாப்பொருளன்றறியும்பொருள்) ஞானக்கண்ணைவிழித்தறியாதபொருளல்லஅறிகின்றபொருள்-எ-று— இதற்குப்பிரமாணம்- திருமந்திரம்) முகத்துக்கண்கொண்டுபார்க்கின்றமூடர்காள்- அகத்துக்கண்கொண்டு பார்ப்பதேயானந்தம மகட்குத்தாயார் மணாளனோ டாடிய சுகத்தைச்சொல்லென்றால் சொல்லுமாறெங்ஙனே என்பதனாற்காண்க. ௫௯

அ-கை. ஞானக்கண்ணாலறியும்பொருள் யாதென்றமாணாக்கன் வினவவாக்கியார்த்தத்தைக் குறிப்பா யருளிச் செய்கின்றார்.

கவி. வேதப்பொருடா னிதுவேறுசொல்லும்
வினையாவையு மன்றொருவேறுமிலாப்
போதப்பொருடந்தமறைக்கணியாம்
புனிதப்பொருடத்வமசிப்பொருளே.

க-து அத்வைதசாம வாரணமுடிவாந்
சுத்தநற்றத்வமசிப் பொருளென்றது

இ-ள். (வெதப்பொருடானிது) வேதஞ்சொல்லப்பட்ட அர்த்தமெல்லாமிது ((வேறுசொலும் வினையாவையுமன்று) இதையன்றி வேற்றுமையாகச்சொல்லப்பட்ட கருத்துகளெல்லாமன்று (ஒருவேறுமிலாப்போதப்பொருடந்த மறைக்கணியாம்) ஒன்றேனும்போதமில்லாத அபேதஞானர்த்தத்தைத் தரப்பட்டசாமவேதத்திற்கு ஆபரணம்போன்ற (புனிதப்பொருடத்வமசிப்பொருளே) சுத்தார்த்தமான தத்வமசியென்னுமகாவாக்கியார்த்தம்-எ-று. வேதப் பொருடந்தமறைக்காணியா மென்றமையால் சாமவேதமென்றுபொருட்படுத்த லாயிற்று. சூய

அ-கை. திரிபதார்த்தையும் விகசிதமாக விரித்தருளிச்செய்கின்றார்.

கவி. நிமலமாம்பா மதுவெனும்பொரு
ணீயெனும்பொருள் சிவனே
மலமான விண்டயிக்கிய
மசிபதப்பொருளாவதே.

க-து. தம்பசந்தொம்பதந் தானது நீயெனும்
இம்பரில்சிபதமேகமென் றுரைத்தது.

இ-ள். (அதுவெனும்பொருணிமலமாம்பரம்) அதுவென்னும் அர்த்தமானது மலரகிதமான பிரமம்அதுதத்பதம் (நீயெனும்பொருள் சிவன்) நீயென்னும்அர்த்தமானது சிவன்இதுத்வம்பதம் அசிபதப்பொருளாவது (அமலமான விரண்டயிக்கியம்) அசிபதபபொருள் அர்த்தமானது மலரகிதமாகிய சிவேஸ்வராளிரண்டும் ஏகமாகின்றது இது அசிபதம் எ-று— அது நீயாமென்பதற்குதாரணம்) (ஒழிவிலொடுக்கம்) உனையுணர்த்திப்பாச முதறியுடையோன்- றனையுணர்த்தில் நீயே தலமாங் - கனலை- விறகிடமாக்காணிலதன்



வெம்மையை வேருக்கி- அறியகிலாப்போலது நீயாமென்பதனுற்காண்க சூக

அ-கை ஆசாரியரை மாணுக்கன்வணங்கிசிலனும்பிரமமும்எப்படிஅயிக்கியங் கூடுமென்றுவினவுகின்றதை அருளிச்செய்கின்றார்

கவி அருமையாகிய பிரமமுன்னிலே
யாகுமாருயிர் பின்னிலே
இருமையாகு மிரண்டயிக்கிய
மெய்துமாறெவ னென்னவே.

க - து. பிரமமுன்னிடம் பின்னிடமாருயிர்
இருபதமொன்று வதெப்படியென்றது

இ-ள். (அருமையாகியபிரமமுன்னிலே யாகும்) பெருமையினையுள்ள பிரமம்முதன்மையான இடமாயிருக்கின்றது (ஆருயிர்பின்னிலே பலரிடத்தும் விகுதியா யிருக்கின்றசீவன் கடையாகிய பின்னிடமா யிருக்கின்றது' இருமையாகுமிரண்டயிக்கி: மெய்துமாறெவனென்னவே அம்மை யிம்மையாகிய இரண்டிடத்திலுமிருக்கின்ற பெருமைசிறுமைபொருந்திய பரமாத்மா சீவாத்மா வென்னும் இரண்டும் இரண்டறப் பொருந்தும்வகை யெப்படியென்றுமாணுக்கன்கேட்க ஆசாரியர்விடையருள ஆரம்பித்தாரென்பவாறு.

அ-கை. சிவேஸ்வராளுக்கு உபாதிகளால்பேதமென்று மேலருளிச்செய்கின்றார்,

கவி உபாதியால்வருபேதமேயிவர்
பேதமொன்றுமுயிர்க்குறுந்
உபாதியாமுடல்போலிறைக்குள
காரணுதிகள்காயமே.

க - து. காரியவுடலுயிர்க் குடைதுபோலவே
காரணவுடலுள விசற்குமென்றது

இ-ள். (உபாதியால்வருபேதமேயிவர்பேதம்) ஜீவேஸ்வரனுக்குஉபாதியினாலே வரப்பட்டபேதமேயன்றி இவர்கள்பேதமன்று-அதெப்படியெனில் (ஒன்றுமுயிர்க்குறுங்கபாதிபா முடல்போல்) ஓராதாரத்தைப்பற்றிநிற்கும ஆத்மாவுக்குப் பொருந்திய கபமாதியாகச் சொல்லப்பட்டஉடலைப்போல (இறைக்குள காரணாதி காயங்கள்) ஈஸ்வரனுக்கும்உண்டு காரணமாகியஉடல் எ-று. சீவனுக்குஉபாதியாகிய உடலெவையெனில் தேகம்- இந்திரியம்-மனம்புந்தி-அகங்காரம்-சித்தம்-பிராணவாயு - ஆகியவேழில்- தேகமாவது ஞானேந்திரியமான ஸ்ரோத்ராதிரு இவற்றின்விஷயமான சப்தாதி-ரு-ஆகிய இவைதேகம்-க-இந்திரியமாவது-கன்மேந்திரியமானவாக்காதி-ரு-இவற்றின்விஷயமானவசனாதி-ரு-ஆகியஇவை யிந்திரியம்க அந்தக்கரணம்-ச-பிராணவாயு-க-ஆக-எ-ம் சீவோபாதி ஏழெனவறிக—கபம்-பித்தம்-வாதம் - இந்நோய்க்குரிய தேகமானகபால் கபாதியாமுடலென்றார்.

அ-கை. மேல்ஈஸ்வரோபதியை அருளிச்செய்கின்றார்,

கவி ஈசன்முற்றறிவாற்வியாபி
ஏவைக்குமேது வியம்புமா
காசகன்னிருபாதிபாவனே
காரணாதிக ளாவதே

க - து. ஆதிஈசனிற்பாவனமீறதா
வோதியபரனுக்குபாதியேழுரைத்தது,

இ-ள். (காரணாதிகளாவது ஈஸ்வரனுக்குரிய காரணவுபாதிகள் ஏழாவன - ஸர்வஞ்யத்வம் - ஸர்வகாரணத்வம் ஸர்வாந்தரியாமித்வம் - ஸர்வேஸ்வரத்வம் ஸர்வசிருஷ்டித்வம்- ஸர்வஸ்திதித்வம்-ஸர்வஸம்ஹாரத்வம் ஆ



கியவேழில் ஈசன் ஸர்வஞ்யன்- அதாவதுஇந்திரியங்களெல்லாம் ஒன்றறிந்த தொன்றறியாத படியினாலும் தான்சர்வத்தையும் அறிகையினாலேயும் சர்வஞ்யனென்றது முற்றறிவான் சர்வகாரணன் அதாவதுஇந்திரியங்களெல்லாமறிந்தும் தானறியாமனிற்கையினால் சர்வகாரணனென்றது(வியாபி சர்வாந்திரியாமி அதாவது இந்திரியங்களுக்கெல்லாம் உள்ளீடாநின்றறிகையினால் சர்வாந்திரியாமியென்றது (ஏவைக்குமேது) ஸர்வேஸ்வரன் அதாவது இந்திரியங்களுக்கெல்லாமேலாய்நின்று விளங்குகையினால்சர்வேஸ்வரனென்றது(இயம்புமாகாசகன்) சர்வசிருஷ்டி அதாவதுஇந்திரியங்களெல்லாம் தன்னுக்குள்ளேதோன்றுகையினால் சர்வசிருஷ்டியென்றது நிருபாதி) சர்வஸ்திதி அதாவது இந்திரியங்களை யெல்லாந்தானே இரட்சிக்கையினாலே சர்வஸ்திதியென்றது(பாவனேசர்வஸம்ஹாரன் அதாவது இந்திரியங்களெல்லாம்தன்னுக்குள்ளே அடங்குகையினால் சர்வசம்ஹாரனென்றது என்றவாறு.

அ-கை மேல்அசுத்த சுத்தங்களை உரைக்கின்றோமென்பதை அருளிச்செய்கின்றார்,

கவி நீதிபாலிருபாதிநீக்கிடில்
நீயெனசசொல் பதத்தினும்
ஆதியாகியதத்பதத்தும்
அசுத்தசுத்த முரைத்துமே,

க-து. ஏழைபுநீக்கிடி னியல்சுத்தாசுத்தமும்
தாழ்வுய ரிரண்டினுஞ்சாற்றுதுமென்றது.

இ-ள், (நீதியாலிருபாதிநீக்கிடி னீயெனச்சொல் பதத்தினுமபியாயமாக இரண்டுபாதியையும் நீக்கினால் த்வம்பதார்த்தமாகிய நீயென்றசீவனிடத்தும (ஆதியாகியதத்

ப்தத்து மசுத்தசுத்த முனாத்துமே முதன்மையாகின்ற தத்பதார்த்தமான அதுவென்ற ஈஸ்வரனிடத்தும்இருக்கின்ற அசுத்தத்தையுஞ் சுத்தத் தையுஞ் சொல்லுகின்றேம்-எ-று. ௨௫

அ-கை மேல்ஜீவஅசுத்த சுத்தங்களை அருளிச்செய்கின்றார்.

கவி, ஆகமுன்றிகமேழுநானெனல்
த்வம்பதத்தி லசுத்தமே
சோகமின்றிய சான்றுநானெனல்
த்வம்பதப்பொருள்சுத்தமே.

க - து. காக்ஷிப்படாது நானென்றதசுத்தமும்
சாக்ஷியேசுத்தந் தானுயிர்க்கென்றது.

இ-ள், (ஆகமுன்றிக மேழுநானெனல் த்வம்பதத்தில சுத்தமே) முன்றெறியச்சொன்ன தேக முதலிய வுபாதியேழையுநானென்று அபிமானித்திருத்தல்த்வம்பதமானசீவனுக்கு அசுத்தம் சோகமின்றியசான்று நானெனல் த்வம்பதப்பொருள்சுத்தமே) முன்சொன்னதேக முதலியவுபாதிகேழையும் நீங்கிஅந்தயயக்கமில்லாமல்நாம்சாக்ஷியென்றுகாணல் த்வம்பதார்த்தமாகிய நீயென்ற சிவனுக்குசுத்தம்-எ-று. ௨௬

அ-கை. மேல்ஈஸ்வர சுத்தாசுத்தங்களை அருளிச்செய்கின்றார்.

கவி. அகிலகாரண மேழுநானெனல்
தத்பதத்தி லசுத்தமே
சகலகாரண சான்றநானெனல்
தத்பதப்பொருள் சுத்தமே.

க - து காரணங்கானென வீசர்க்கசுத்தமும்
ஆரணன்கரியே சுத்தமென்றறைந்தது,



இ-ள். (அகிலகாரணமேழும் நானெனபதத் பதத்தில சுத்தமே எல்லாவுலகத்திற்குங் காரணமாகின்ற ஏழுபாதியையுந் தானய்க்கொண்டிருந்த காலந்தத்பதப்பொருளாகின்ற ஈஸ்வரனுக்கு அசுத்தமாகின்றது.சகல காரண சான்றுநானெனல் தத்பதப்பொருள்சுத்தமே)ஏழுபாதியையுநீங்கி எல்லாக்காரணத்திற்குஞ் சாக்ஷிதானு யிருந்தகாலந் தத்பதப்பொருளானஈஸ்வரனுக்கு சுத்தமாகின்றது-எ-று. ௨௭

அ-கை மேல்அஸிபதார்த்தமிஃதென அருளிச்செய்கின்றார்.

கவி. செறிந்தகாரண காரியங்கள்
சிதைந்துமேலுறுசித்ததாய்
அறிந்தவாதனை தானுமற்றது
அசிபதப்பொருளாவதே

க து இதுவதுவுபாதியற்றேகமேநாமெனும்
அதைமறந்ததுவே அஸிபதமென்றது

இ-ள், (செறிந்தகாரணகாரியங்கள்)சிதைந்துமேலுறுசித்ததாய்நெருங்கிய காரணஉபாதி காரியஉபாதிகள்கழிந்துமுடிவிற்பொருந்திய சித்தேநாமென்று (அறிந்தவாதனை தானுமற்றது அசிபதப்பொருளாவதே) அறிகின்சிவஅறிவானதானுமில்லாமல் அதுவாகின்றதே அசிபதத்திற்கர்த்தமாகின்றது. ௨௮

அ-கை, மேல்முக்கிய லக்ஷியார்த்தங்களை அருளிச்செய்கின்றார்.

கவி, அசுத்தமாகிய திருபதத்தினு
முக்கியப் பொருளாவதே
விசுத்தமான இலக்கியப்பொரு
ளென்றுசொல்லுவர்விமலரே,

க - து, சுத்தமற்றிருக்கின் முக்யமிரண்டினும்
சுத்தமுற்றிருப்ப திலக்கியமென்றது,

இ-ள். (அசுத்தமாகியதிரு பதத்தினுமுக்கியப் பொருளாவதே) அசுத்தமாகின்றது தத்பதம்-த்வம்பதம்இவ்விரண்டினு மிருந்தபோதுமுக்கியப்பொருளென்றும்)விசுத்தமான திலக்கியப் பொருளென்று சொல்லுவர் விமலரே) சுத்தமாகின்றது தத்பதம்த்வம்பதம் இவ்விரண்டினுமிருந்தபோது லக்ஷியப்பொருளென்று சொல்லுவார் மலாதீதராகிய பெரியோர்கள்-எ-று.—இதன்றாற் பரியம் - ஜீவேஸ்வரஸ்வரூபம்- உபாதியுடன் சம்பந்தித்துநின்றபோது முக்கியமென்றும்உபாதியைப் பிரிந்தபோது லக்ஷியமென்று- உபாதியை நானென்றபோது அசுத்தமென்றும் உபாதிக்குசாக்ஷியானபோது சுத்தமென்றுஞ் சொல்லியதாம். ௬௯

அ-கை, மேல்முக்கிய லக்ஷியார்த்தங்களை அருளிச்செய்கின்றார்.

கவி, முரண்டசிவ பரங்கடம்முடன்
முக்கியப் பொருளாவதே
இரண்டில்வேறறு சிற்சொரூப
மிலக்கியப் பொருளாவதே.

க - து, இரண்டுடலோடு மிருப்பதுமுக்கியம்
இரண்டுடலற்ற திலக்கியமென்றது,

இ-ள், முரண்டசிவ பரங்கடம்முடன் முக்கியப் பொருளாவதே) சிவபரங்கள்மாறுபாடாகின்ற காரியகாரண உடலில் சம்பந்தித்துநின்றபோது முக்கியப் பொருளென்னும்இரண்டில்வேறறு சிற்சொரூபமிலக்கியப் பொருளாவதே) இவ்விரண்டுபாதியையுமநீக்கிசாக்ஷியாய் நின்றபோது லக்ஷியப்பொருளென்றுஞ் சொல்லப்படுகின்றது என்றவாறு, ௭௰



அ-கை-மேல் உபாதித்வய மும்நீக்கில் ஏகவஸ்துவாமென்பதை அருளிச்செய்கின்றார்

கவி- ஊக்கியப்பர சிவர்தங்க
ளுடம்பிரண்டு மிலக்கணு
வாக்கியப்படி நீக்கினுலொரு
வஸ்துவே பரவஸ்துவே,

க - து இலக்கணத்தாலுட லிரண்டையுநீக்கிடின்
துலக்கமாம் வஸ்துசொரூபமென்றென்றது

இ-ள் ஊக்கியப்பரசிவர்தங்களுடம் பிரண்டும்உயர்ச்சியையுடைய பரத்தினதுஉடலும் தாழ்வையுடையசிவனதுஉடலும் ஆகிய விரண்டையும் (இலக்கணவாக்கியப்படி நீக்கினுல்) வேதன்சொல்லியஇலக்கணக்கணவாக்கியப் பிரகாரம் விலக்கிப் பார்த்தால்(ஒருவஸ்துவே பரவஸ்துவே)இரண்டற்ற ஒருவஸ்து வாகியபிரமமாய்-எ-று—உயர்ச்சி யென்றமையால் தாழ்வு வருவிக்கப்பட்டது. ௭௧

அ-கை- முன்சொன்ன இலக்கண மித்தனையென்பதை மேலருளிச்செய்கின்றார்.

கவி- ஓரில்விட்டதும் விட்டிடாததும்
உபயமும்மென வுணர்வுளோர்
தேரிலக்கணை திரிவிதத்தில்
இசைப்பர்மற்ற தியம்புவாம்.

க-து- விட்டதும் விடாததுமிரண்டு முரைத்து மேல்
விட்டுவிடாததும் விளம்புவோமென்றது,

இ-ள்- (ஓரில்விட்டதும் விட்டிடாததுமுபயமும்மென) அஃதை ஆராய்ந்தறியுமிடத்து விட்டலக்கணைவிடாதலக்கணை விட்டுவிடாத லக்கணை யென்றும் (உணர்வுளோர் தேரிலக்கணை திரிவிதததிலிசைப்பர்) அறிவுடையோர்கள் வேதங்களை ஆராய்ந்து அதிலுள்ள லக்ஷணவா

க்கிய மூன்றுவிதமாகச் சொல்லுவார்கள்(மற்றதியம்புவா
ம் அதுகளைச் சொல்லுகின்றோம்-எ-று ௭௨

அ-கை முன்சொன்ன லக்ஷணைமூன்றினுள்விட்ட
லக்ஷணையை அருளிச்செய்கின்றார்

கவி- மஞ்சுகூப்பிடுதென்றல்போலவும்
வடபகிரதி யுள்ளதே
விஞ்சுகோஷமதென்றல் போலவும்
விட்டலக்கணையாகுதே.

க - து கங்கையுமஞ்சமுங் கழறுமோவதுபோல்
அங்கமுனக்குவேறுமெனவுரைத்தது.

இ-ள்- (மஞ்சுகூப் பிடு தென்றல் போலவும்)கட்டிலா
னது கூப்பிடுதென்றொருவன்சொல்லும் அர்த்தம்போ
லவும்(வடபகிரதியுள்ளதேவிஞ்சுகோஷமதென்றல்போ
லவும்)வடகங்கைக்கணுள்ளது இடைச்சேரியென்றொரு
வன்சொல்லும்அர்த்தம் போலவும் (விட்டலக்கணையாவா
திது- எ-று—[இதன்றாற்பரியம்] கட்டில்கூப்பிட்டதெ
ன்றும்கங்கைக்க ணிடைச் சேரியுள்ளதென்றும் ஒருவன்
சொல்லுமிடத்து - மஞ்சமானது மரம்மரமானது கூப்பி
டுமோ - மஞ்சத்திலொருவனிருந்துகூப்பிட்டானென்று
கொள்ளவேணடிற்று - கங்கையானது - ஜலம் - ஜலத்தி
லேஇடைச்சேரிஇருக்கமாட்டாது கங்கைக்கரையிலே
இடைச்சேரியிருக்கின்றதென்றுகொள்ளவேண்டிற்று -
இப்படிப்போலஸப்த உபாதிக்குஞ்சீவன் சாக்ஷியாயிரு
க்கின்றானென்றுகண்டறிவதாம்இது சமசர்க்கவாக்கியமா
கிய விட்டலக்ஷணையாம். ௭௩

அ-கை- மேல்விடாதலக்ஷணையைஅருளிச்செய்கி
ன்றார்.



கவி- செவலைநின்றது வெள்ளைபோயின
தென்றுசெப்புதல்போலவே
கவலையின்றி விடாதலக்கணை
என்றுநீகொள் கருத்திலே

க - து நிறமொன்றைப்பற்றி நிற்கின்ற வாறெனப்
பரனுக்குவேறன் றுயிரெனவுரைத்தது.

இ-ள்-(செவலைநின்றது வெள்ளைபோயின தென்றுசெ
ப்புதல் போலவே ஒருசிவப்புக் குதிரையும் வெள்ளைப்
பசுவையுங் கண்டாயோவென்பார்க்குசிவப்புநிற்கின்றது
வெள்ளை போகின்றதென்று சொல்லுதல்போலவும்)கவ
லையின்றிவிடாதலக்கணையென்றுநீகொள்கருத்திலேமன
திற்றுன்பமின்றி விடாதலக்கணை காட்டிற்றென்றுநின்க
ருத்திற்கொள்ளுவாய்எ-று—(இதன்றாற்பரியம்) சிவப்பு
க்குதிரையும்வெள்ளைப்பசுவையுங் கண்டாயேயென்பார்
க்குசிவப்பு நிற்கின்றதுவெள்ளைபோகின்றதென்னுமிடத்
துசிவப்பானவர்னந்தனியேநில்லாது வெள்ளையானவர்ன
ந்தனியேபோகாது சிவப்பையுடைய குதிரைநிற்கின்ற
தென்றும் வெள்ளையையுடைய பசுவுபோகின்றதென்று
க்கொள்ள வேண்டிற்று - இப்படியாகசர் வஙபத்வாதிஉ
பாதியுடையவனைபோல அகற்றுச் சாக்ஷியாயிருக்கின்றா
ன் பரனென்றுகண்டுகொள்கஇதற்கு விசிஷ்டவாக்கியம்
சோனஸ்திஷ்டதிசுவேதமாவதி என்னுமவிடாதலக்ஷ
ணையாம்.

அ-கை- மேல்விட்டுவிடாத லக்ஷணையைஅருளிச்
செய்கின்றார்-

கவி மேவும்விட்டுவிடாதலக்கணை
மெய்மையாதெனிலிக்தவத்

தேவதத்தனெனும் பொருட்படி
சிந்தைசெய்திடுதீரவே

௧-து அவனேயிவனெனுமருத்தவழியே
இலக்கணையதுவெனுமியல்பையுரைத்தது,

இ-ள்-(மேவும்விட்டுவிடாதலக்கணைமெய்ம்மையாதெனில்)சம்பந்தம்விட்டுவிடாத லக்ஷணையினதுஉண்மையாதென்றால்(இந்தவத்தனெனும்பொருட்படிசிந்தைசெய்திடுதீரவே)இந்த விடத்திற்கண்டது அந்தேவதத்தனென்ற அர்த்தப்படி சிந்திக்கில் சந்தேகந்தீர்ந்துபோகின்றது எ-று—(இதன்றாற்பரியம்)முன்சொல்லிய ஸம்ஸர்க்கவாக்கியமும்விசிஷ்ட வாக்கியமுஞ் சொல்லப்பட்ட உபாதிதீர்ந்து லக்ஷியமானதுமென்கிறவாஸநாதோஷமாகியகுற்றம் அகண்டவாக்கியத்தினாலேநீக்கிஏகம்பண்ணப்படும் - அகண்டவாக்கியமாவது - ஸோயந்தேவதத்தன் என்றது ஒருதேவதத்தனென்கிற புருஷனுடன்நாம்சிலகாலங்கூடியிருந்தோம்சிறிது நாளுக்குப்பின்புபிரிந்துபோயினன் அநேகநாளுக்குப் பின்புமதுரையில் இராஜாவாகக்கண்டோம்பின்புபிரிந்து போயினனும்சில நாளுக்குப்பின்புசிதம்பரத்தில் சந்நியாசியா யிருக்கக்கண்டோம்அப்பொழுதுஇவன் அந்தேவதத்தனோவென்றுசந்தேகிக்கையில் அவன்முகத்திலே மறுவுண்டே யென்று பார்க்கும்போது அடையாள மிருக்கையால் அவனேயிவனென்று சொல்லப்பட்டது அப்போது அவனே இரண்டிடமும் இரண்டுகாலமும் விட்டன அவைவிட்டுப்போகவிடாமனின்றவன் ஒருதேவதத்தன்மாத்திரம் அவனைபோல்த்வம்பதமாகிய ஜீவோபாதிக்கும் தத்பதமாகியபரவுபாதிக்கும் சாக்ஷியாய்நின்றவன் ஒருவனே இப்படியிரண்டு பாதியும்போகஇரண்டிடத்துநின்ற ஜீவனும்பரனும் பரனேஜீ



வனென்று ஏகமாகக்காண்பது விட்டுவிடாதலக்கணையாமென்றதாம் ௭௫

அ-கை- மேல்விட்டுவிடாதலக்கணையின்படிநீகொள்ளவேண்டியதென்பதை அருளிச்செய்கின்றார்

கலி· விட்டலக்கணைதனையும்விட்டு
விடாதலக்கணை தனையும்நீ
விட்டுவிட்டுவிடாதலக்கணை
யால்விளங்கு விளங்குவே

௧-து முன்னிலக்கணைமுழுதையுநீக்கி
பின்னொருவிலக்கணை யருத்தமாகென்றது

இ-ள்(விட்டலக்கணைதனையும்விட்டு)கட்டில் கூப்பிடுமோ அதிலொருவிடனிருந்து கூப்பிடுகின்றானென்றும் கங்கைசத்திக்குமாகங்கைக்கரையிலிருக்கும்இடைச்சேரி சத்தமென்றறிவதுபோலும்எழுபாதிக்குஞ் சாக்ஷியாயிருந்தான்ஜீவனென்றறியச்செய்த(விட்டலக்கணையும்விட்டுவிடாதலக்கணையும்விட்டு)சிவப்புநிற்கின்றதுவெள்ளைபோகின்றதென்னில் சடமானநிறம்ஓடுமோ நிற்குமாகுதிரையைப் பசுவைப்பற்றிநிற்குமோவென்றறிவது போலும்எழுதாதிக்குஞ் சாக்ஷியாயிறந்துபரமென்றறிவித்த விடாதலக்ஷணையும்விட்டுவிடாலக்கணையால்விளங்கவே விளங்குமானுக்கனேநீமுன் சொல்லியஇரண்டிலக்கணையின்பயனையும் விட்டுவிட்டுவிடாதலக்கணையினாலேபிரகாசமாகத்தெளிவாய்-எ-று—(இதன்றாற்பரியம்) தேவதத்தனனவன்இரண்டிடமும்இரண்டுகாலமும் நீக்கிப்பார்க்கில்ஒருதேவதத்தனேயனதுபோலகாரியஉபாதியையு

ம்காரணஉபாதியையும் நீக்கிப்பார்க்கில்பரிபூரணமாய்வி ளங்குகின்றபரமேநீயென்றறிவித்ததாம் ௭௬

கவி- போதுமேவியதேயம்விட்டொரு
புருடனைக்கொளுமாறுபோல்
ஓதுமீருடல் கண்டுவிட்டதன்
உண்மைகாண வுணர்ந்திடே.

க - து காலதேயம்விட்டவன்றனைக்காண்டல்போல்
தூலம்விட்டுண்மையைத்தொகுந்தறியென்றது

இ-ள், போதுமேவிய தேயம்விட்டொரு புருடனைக் கொளு மாறுபோல்) அந்தக்காலம்இந்தக்காலம்மென்று சொல்லுங்காலத்தையும்-அந்ததேயம்இந்ததேயமென்று சொல்லுங்தேயத்தையும் - நீக்கிவிட்டுஒருதேவத்தனுகிய புருடனை அவன்தானிவனென்று அறிந்துகொள்ளுமவகைபோல(ஓதுமீருடல்கண்டுவிட்டதனுண்மை காண வுணர்ந்திடே முன்சொன்னகாரியகாரண உடல் இரண்டையும்ஈதின்று அறிந்துநீக்கிஇரண்டிடத்துமிருந்தது ஒன்றுதானென்று அதனுண்மையைக்கண்டறிந்துகொள்ளஎ

அ - கை- மேல் உபாதிகளை நீக்கிசாக்ஷியைக்கண்டுகொளென்பதை அருளிச்செய்கின்றார்

கவி. புரியாவுயிர் காரியமாமுடலும்
பிரமத்துறு காரணமாமுடலும்
கரியாகிய வாதனையுந்தவிரக்
காட்டும்படிகண்டுகொள்கண்ணுறவே

க - து ஈசனுயிருட லிரண்டையுநீத்துநீ
மாசறுசாக்ஷியின் வழிகாணென்றது

இ-ள்(உயிர்பிரியாக் காரியமாமுடலும்)சிவனைவிட்டுப் பிரியாதகாரிய வுபாதியென்னுங் தேகமும்(பிரமத்துறுகாரணமாமுடலும்) பிரமத்தைப்பொ



ருந்தியகாரணவுபாதியென்னுங் தேகமும் (கரியாகிய வாதனையுந் தவிரக்காட்டும்படி) சாட்சியாகிய வாசனை வுபாதியுநீங்கநாங்காண்பித்தபடியே (கண்டுகொள்கண்ணுறவே) அறிவினிடமாகப் பொருந்தக்கண்டுகொள்-எ-று

அ-கை. அந்தக்கரணங்க ளிருந்தாலும் நீங்கினலும் சைதன்னியத்தை யறியக்கூடா தென்பதைமேலருளிச்செய்கின்றார்,

கவி. கரணத்திரளிற் பினுமப்பொருளைக்
காணக்கிடையாதவை கையறவே
மரணப்படினும் மதுகண்டுகொளும்
வழியில்லையெனும் படிநீமதியே.

க - து. கரணங்களிற்பினுங் காண்பதரிதவை
மரணங்களாயினும் வழியில்லை யென்றது.

இ-ள், (கரணத்திரளிற்பினு மப்பொருளைக்காணக்கிடையாது) அந்தக்கரணக் கூட்டங்கள்தமது செவ்வைகெடாமலிருக்கினும் அந்தப்பிரமத்தைக்காண்பது அரிது அவைகையறவே மரணப்படினும மதுகண்டு கொளும் வழியில்லை) அவ்வந்தக்கரணங்கள் இறப்பினும் பிரமத்தைக்கண்டுகொள்வதற்கு மார்க்கமில்லை) எனும்படி நீமதியேஎன்றபிரகாரத்தை யுனதுவிவேகத்தினலே அறிந்துகொள்வாய் என்றவாறு —இதன்றாற்பரியம்) அந்தக்கரணமானது ஆதித்தன் சந்நிதியில் வைத்ததீபம் போல செவ்வைகெட்டிருந்தால் சைதன்னியத்தைப்பொருந்தலாமென்றது ஆதித்தனைப்போல அறிவுதீபம் போல அந்தக்கரணமெனவறிக. ௭௭

அ-கை, அவஸ்தாத்திரயத்தில் அந்தக்கரணதிகள் வியாபிக்கின்றதை மேலருளிச்செய்கின்றார்.

கவி- எந்தக்கரணங் களுமேவல்கனு
இதில்லாதனையாம் விஷயங்களோடே
அந்தக்கரணங்கள் பொருந்தல்கனு
அவைமாய்தல் சுஷுப்தி யவத்தையதே

க - து. நனவுங்கனவு நட்டியசுஷுப்தியும்
இனமிதுவென்ன விளக்கவுரைத்தது.

இ-ள். (எந்தக்கரணங்களுமேவல்கனு) எல்லாத்தத்துவங்களுந்தனது செய்கைகளைச் செலுத்துமிடஞ்சாக்கிரம் (இதில்லாதனையாம் விஷயங்களோடே அந்தக்கரணங்கள்பொருந்தல்கனு) சாக்கிரத்தில்நின்ற தத்துவங்களில்லாதனைக்குரியவாக்காதிகளுடனே அந்தக்கரணம் பொருந்திநிற்கின்றது ஸ்வப்நம் (அவைமாய்தல சுஷுப்தியவஸ்தையதே) ஸ்வப்நத்தில் நின்றதத்துவங்களு மிறந்துநிற்கின்றதே சுஷுப்தியென்றவாறு.—(இதன்றுற் பரியப்) அவஸ்தாத்திரயத்திலும்போக்குவரத்தாய் வியாபித்திருக்கும அறிவென்றதாம். அ௰

அ-கை. நனவிற் சுஷுப்தியுநின்சைதன்னியம்பிரகாசிக்குமென்டதை மேலருளிச்செய்கின்றார்

வேறு-கவி

வினைவிற்பரத்தை யறிவுறுதற்கவைத்தைபுலன் வினைமாறியே-நனவிற்சுழுப்தி நிலைவரினப்பொருட்டிசழுப்நலமாகவே,

க - து சாக்கிரந்தனிலறிதூக்கம்வந்துற்றிடின்
நீக்கமில்லாப்பர நிலைவருமென்றது

இ-ள், (பரத்தையறிவுறுதற்கு வினைவில்அவத்தைபுலன்வினைமாறியே) பிரமத்தைஅறிவுபொருந்துதற்கு எவ்விதமென்று நீகேட்கில்அவத்தைகளில்நின்ற அறிவு அவ்வவ்வவத்தைகள் மயமாய்நிற்குமச்செயகைகளிங்கி (நனவிற்சுழுப்தி நிலைவரினப்பொருட்டிசழுநலமாகவே) ஜாக்கிரத்தில் சுஷுப்திபின்செய்கைவருமாகில் அந்தபிரமசைதன்னியநன்மை பெறப்பிரகாசிக்கும்-எ-று. அக



அ-கை. சிவத்தன்மை இதுவென்றம்ஈஸ்வரத்தன்மையிதுவென்று மேலருளிச்செய்கின்றார்

கவி. துவிதத்தவத்தை களையறிவுற்றவற்றரிநிலைசிவனே இவித்திலப்புருடனனவுற்றவத் துரியநிலையிசனே,

க - து, சிவவறிவினைத் திருப்பிப்பிரம
பாவனை யறிந்துயிர்ப்பணம்பென்றுரைத்தது

இ-ள். (துவிதத்தவத்தைகளையறிவுற்று இரண்டுவித அவத்தைகளைப்பொருந்தஅறிந்து (அவற்றுரியநிலை) அவைகளுக்குரித்தாகிய நிலைகளைப்பெற்றிருந்த) அப்புருடன்சிவனே) அந்தப்புருஷனாகிய ஜீவன்றானே (இவிதத்தில்) இந்தவகையில கண்டகாட்சியைநீக்கி நனவுற்றவத்துரியநிலையிசனே) நனவில்அந்ததுரியஅறிவு பொருந்துமாகில் நிலைபெற்றஈஸ்வரத்தன்மையாம்-எ-று. அஉ

அ-கை. மகாவாக்கியார்த்தத்தை மேலருளிச் செய்கின்றார்.

கவி அகிலக்கரிப்பராதுரியப் பொருட்டுரிய மதுவதைகவே புகலுற்றதத்வமஸியெனுமுப்பதத்தின் முமபொருளாவதே

க-து. முப்பதமுடிவினின் முதற்பொருளாமது
செப்பியகரியாஞ்சகத்திற்கென்

இ-ள (அகிலக்கரி)ஜகத்திற்குச் சாட்சியாகவிருக்கின்றபிரமமும் ( ராதுரியப்பொருள்)அகிரகசியார்த்தமானஜீவசாட்சியாகியகூடஸ்தனும (துரியமதுவாகுகவே வசமா

னபிரமமாகுகையே (புகலுற்ற)வேதமுடிவாகிய மகாவாக்கியஞ்சொல்லுகின்ற தத்வமசியென்னும்)தத்பதம்-தவம்பதம் அசிபதம்என்னும்(மும்பதத்தின் முடிபொருளாவதே) மூன்றுபதத்தினுமுடிவினின்ற பதத்தினலேகமாகியஅர்த்தம்-எ-று,—என்னவேசிவேஸ்வர வாச்சியநீங்கிகூடஸ்தபிரமமாகுசவென்பார் முப்பதத்தின்முடிபொருளாவதென்றுர்—(இதற்குகாரணம் சொரூபானந்தர் அன்னைப்பத்து) தத்பதந்தொம்பதந் தாமாய வப்பதம்-இப்பதமானவ ரன்னேயென்னும் இப்பதமாயவியல்லையிதுவென்று செப்பமுடியுமோ வன்னேயென்னும்-என்பதனுற்காண்க ௮௩

அ-கை. மேல்வேதாந்தஉபதேசஞ்செய்த ஆசாரியனைமாணுக்கன்வணங்கிவிண்ணப்பம்பண்ணிக்கொள்வதைஅருளிச்செய்கின்றுர்

கவி. நிமலப்பொருட்சுருதிநெறியிற்பெறக்கருணை-நிதிகூறவேஅமலப்பொருட்பொறுதலருமைத்தெனக்கமுறியடி வீழவே

க-து. சுருதிநெறிபெறச் சொற்குருபதத்தினில்
அரியதென்றவனு மனைந்துதொழுதது

இ-ள் (நிமலப்பொருள்)சுத்தார்த்தமாகிய பிரமத்தை சுருதிநெறியிற்பெற வேதஞ்சொல்லியமார்க்கப்படிபெற்றுக்கொள்ள(கருணைநிதிகூறவே கிருபாநிதியாகிய ஆசாரியர்அருளிச்செய்யவே(அமலப்பொருட்பெறுதல்) சுத்தார்த்தமானபிரமத்தை அடியேன்பெற்றுக் கொள்வது (அருமைத்தெனக்கமுறியடி வீழவே) அரியதன்மை பென்றுவிண்ணப்பஞ்செய்து ஆசாரியர் திருவடிகளில் பாணுக்கனவிழுந்துஞ்சலிக்க-எ-று ௮௪



அ-கை, சேவித்துநிற்கு மாணுக்கனுக்கு ஆசாரியர் உளங்களிகூர்ந்து பிரமோபதேசஞ்செய்யும் பொருட்டு பூர்ணுபிஷேகஞ்செய்ததை மேலருளிச் செய்கின்றுர்,

கவி- தமரக்கலைக்களவுதெரிவற்ற தற்பொருளதனையீகுவான்- அமரர்க்களப்பரியபதநற்புனற்கொடு செய்தபிஷேகமே

க-து. தற்பொருளருள்குரு சசிவர்னனுக்கு
நற்பதப்புனலபிஷேகமுஞவின்றது.

இ-ள். தமரக்கலைக்களவு தெரிவங்கலைலிக்கப்பட்டகலைஞானங்களினுலளவிட்டறிதற்கரிய (தற்பொருளதனையீகுவான்) அதுவென்னுமர்த்தமான வதனைஅளித்தருளுமபொருட்டு (அமரர்க்களப்பரியபதநற்புனற்கொடு)தேவர்களுக்கும் அளவிடற்கரியமகிமைதங்கிய பாதோதகத்தினுலே செய்துஅபிஷேகமேசீஷனுக்கு அபிஷேகஞ்செய்தருளி-எ-று- ௮௫

அ-கை. ஆசாரியர்தனது சேஷமளித்து மாணுக்கனுடற்பகைநீக்கியதை மேலருளிச்செய்கின்றுர்-

கவி. பவளத்தில்வைத்தமுதினின் மிச்சிலிட்டினிய பரிவோடுமோதவளப்பொடிக்கவசமெனவிட்டுடற்பகைகடலைசாயவே

க-து- வெண்பொடியளித்தவன் வினைகணீங்கியபின்
உண்டதன்சேட முதவியதுரைத்தது.

இ-ள். (உடற்பகைகடலைசாய) உடற்பகைகளும் உயிர்ப்பகைகளும்உட்பகைகளும்நிலைபெடாமல்நீங்கும்பொருட்டு (மாதவளப்பொடிக் கவசமெனவிட்டு) பெருமையுந்துல்லியமுமுள்ள விபூதியினுலேகவசங்கரித்ததுபோலநுதல்முதற் றேகத்திற்றரித்து(பவளத்தில்வைத்தமுதினினிய) தமது அதரத்தில்வைத்த அமுதினை மிஷி

தாகிய (மிச்சில்டாரிவோடுமிட்டு) தமதுபரிகலசேஷத்தை அன்புடனளித்தருளி-எ-று. உடற்பகைகளாவன-அனல் சீதம்-அசனி புனல்-வாதம்-விஷம்-ஆயுதம்- மருந்து பசி தாகம்-பிணி முனிவருமை, உயிர்ப்பகைகளாவன- காமம்குரோதம்-லோபம்-மோகம்-மதம்-மாச்சரியம் - பயம்-வெருளி-உவமை-நினைப்பு-மறப்பு-உட்பகைகளாவன- உறக்கம்-நோய்-மரணம்-இவைகளெனவறிக. உடற்பகைகளென்றதனால் உயிர்ப்பகை உட்பகைவருவிக்கப்பட்டது

அ-கை. மாணாக்கனுடல் பொருளாவி மூன்றையும் கையேற்று தீக்ஷைசெய்வதை மேலருளிச் செய்கின்றார்.

கவி. உதகத்துடம்பொருளோடுயிர்க்கைக்கொடுச்சி மிசையொருபோதோடே-பதகத்தலத்தைவிட விருகைத்தலத்தொடிருபதமேவவே.

க-து. உடல்பொருளாவி யுதகமோடீக்தபின்
இடபதந்தலையிற் கைதீக்ஷையெய்தென்றது

இ-ள் (உதகத்துடம் பொருளோடுயிர்க்கைக் கொடுமாணாக்கனாகிய சசிவர்ணன் உதகசகிதமாயுடல் பொருளாவிமூன்றனையுந் தத்தஞ்செய்ய அதை ஆசாரியர்கைக்கொண்டு (உச்சிமிசையொருபோதொடே-பதகைத்தலத்தைவிட) உத்தமாங்கத்தின்மீது ஒருபுஷ்பசகிதமாய் அழகுடையமான தமதுகைத்தலத்தை வைத்து அந்ததீக்ஷைசெய்ய (இருகைத்தலத்தோடிருபதமேவ) சிஷன் தனதிருகைகளினாலும் ஆசாரியர் இருதிருவடியையும் பொருந்தப்பிடித்துக்கொள்ளவே-எ-று.—உடல்பொருளாவி மூன்றனையுந்தத்தங்கொடுத்தலாவது-உடலைத்தன்னுதென்



றோன்றபிமானித்தலின்றி யிருத்தல்-பொருள்களின்மேலபற்றுதலின்றி யிருத்தல்-ஆவி-சிவமன்றிவேறொன்றைச்சுட்டுதலின்றி யிருத்தலாம்—(அதற்குப் பிரமாணம்-பிரமகீதை உயர்ந்தமெய்ஞ்ஞான சிட்டையாலனைத்தும் உணர்ந்த மேலோர்க்குளமகிழ வியக்குடலாவி பொருளையுட்சமர்ப்பித்தினை பிலாப்பிரமவானந்தம் - தடங்கிறேருடலபி மானத்தைநீக்கித் தனத்தின்மேல பற்றுதலின்றிச் - சுயப்பிரகாசச்சிவமலதொன்றைச் சுட்டிடாரவர்பதந்துதிப்பாம் - என்பதனாற்காண்க. ௮௭

அ-கை- ஞானநேத்திரத்தையருளி பிரமாநுபவமுறையென்றதை மேலருளிச்செய்கின்றார்.

கவி - ஒழியப்புலக்கணு பிடகப்பொருட்டே
ரியவுளஞானமாம்- விழியைக்கொடுத்துமோ
ழியெனமுப்பதப் பொருளும்வெளியாகவே

க-து. ஊனக்கணன்றென் றுளக்கண்ணளித்தபின்
ஞானப்பொருளநுபவமுணாயென்றது.

இ-ள். (புலக்கணொழியவுளஞானமாம் விழியைக்கொடுத்து) புலன்களிலொன்றாகிய விழியாற் பார்க்கின்றதையொழித்து உள்ளேபிரகாசித்தறியும பேரறிவாகிய ஞானநேத்திரத்தைக் கொடுத்தருளி (உபநிடதப் பொருட்டெரிய முப்பதப்பொருளும் வெளியாகமொழியெனவே உபநிஷத்து அர்த்தந்தெரியும்படிக்கு திரிபதார்த்தமும் பிரகாசமாகச் சொல்லென்று கேட்கவே-எ-று—அங்ஙனமாசாரியருபதேசித்ததும், இங்ஙனமாணாக்கனேற்றுக்கொண்டதும், சம்பிரதாயமெனவறிக ௮௮

அ-கை- மாணாக்கன் அவஸ்தாத்தரிசனஞ் செய்து அநுபவமுணர்க்கின்றதை மேலருளிச்செய்கிறார்.

இ-ள் (காணமாகியநினைவிது வெனும்படி) அனித்தி யமாகிய காலமிதுவென்று சொல்லும்படிக்கு மனதிகர ணங்களையுமிறந்துள சுழுத்தியுங்கண்டேன்) மனமாதி யாகியகரணங்கள் யாவையும்பகைப்பத்து ஆவின்வினை போலுள்ள சுழுத்தியையுங்கரிசித்தேன்-எ-று— அவ்வத் தம்மூலப்பிரகிருதி சிவகாரணதேகம்-மூதற்பாழெனவுங் கொள்க- வடவித்தான துசாகோசாகைகளையும் பஞ்சவ ர்ணங்களையுங்கன்னுக்குளடக்கித் தானணுப்போல விரு க்கின்றதைஅவ்வத்தமெனக்காண்க (உதாரணம்பக்கட னையும்பகைப்பறவிருக்கிப்-பாரிருக்கிவ்வண மென்ம ருள்புரிய-அக்கமதுநுவமாயினதென்ன அதுபிது சு ழுத்தியவ்வியக்தமாமாயை உத்தமவுருத்திர பதமூற்பி ரகிருதிஉனதுடலாமூதற்பாழ் சகர்லசுதனை பத்தியகறி பிராஞ்ஞ னெனவருளப்பரிபூரணனேபள்ளியெழுந்தரு ளாளே-என்பதனுற்காண்க. ௯௨

அ-கை. மேல்துரியதரிசனத்தையுரைக்கின்றார்

கவி. எஞ்சலின்றியெனக்கரணமு
மிறந்திருணடிருந்த
துஞ்சலங்குணர்போதமாக்
துரியமுங்கண்டேன்.

க-து. குறியாம்மூன்றையுங் குலிக்கிடுஞ்சித்தம்
அறியாதறிவே துரியமதென்றது.

இ-ள். (எஞ்சலின்றியெக்காணமும்) குறைவில்லாத எல்லாத்தத்துவமும் இறந்திருண்டிருந்ததுஞ்சல் இறந் தஇருண்மயமாகியகிலேபெற்றிருக்கின்ற(அங்குணர்போ தமாம்துரியமுங்கண்டேன்) அவ்விடத்திலறிகின்ற அறி வாகியதுரியமுங்கரிசித்தேன்-எ-று— நனவிலுங் கனவி லுஞ்சுழுத்தியிலுமிருந்தறியும் அறிவாகியகாட்சியேதுரி



யமென்பார்உணர்போதமாந்துரியமென்றார் (அதற்குதா ரணம் - தத்வராயசுவாமிகள்பாம்பாட்டி மனமுதலானக ரணமெல்லாமாயவருள் செய்தாராணையானை-நனவிலுங் கனவிலுஞ்சுழுத்தியுலுஞ் நானேதானே னென்றுடாய் பாமபே-என்பதனுற்காணக. ௯௩

அ-கை- மேல்பரசாக்கிரதரிசனத்தை யுரைக்கின்றார்.

கவி. துரியமாகியபோதமோர்
துளக்கமற்றனைத்துங்
கரியதாயிருந்திடம்பர
னனவெனக்கண்டேன்

க-து. காட்சியாங்காரணகாரியமெனைக்கும்
சாட்சிவைக்கிடம்பர சாக்கிரமென்றது

இ-ள். (துரியமாகியபோதம்) காரியவுபாதியாகியதூல சூட்சுமகாரண தேகத்திரயமும நனவுகனவுசுழுப்தி அ வஸ்தைத்திரயமும்-விச்வ- தைசத-பிராஞ்ய- அபிமானி- த்திரயமும்ஆகிய இவைகளைசங்சர்க்கவாக்கியத்தால்வே றசெய்து மெல்சேடித்து நின்றஅறிவு(ஓர் துளக்க மற்ற னைத்தும்) ஓரசைவுமின்றிமுன்சொல்லியவனைத்திற்கும் (கரியதாயிருந்திடம்பர னனவெனக்கண்டேன்) சாட்சியா யிருந்தஇடத்தைப்பரசாக்கிரமாக தரிசித்தேன் -எ-று. (உதாரணம்) விரிவுறுகாரிய வுபாதிகளெல்லாம்- வேறு செய்தறிவிராட்புருடனையெனவும்- கரியதுவாக நின்றன் னைவுமுழுதும்-கழன்றன சங்சர்க்கவாக்கிய மதனுல்-து ரியமதனையறிதொம்பதமகேசர்-சொல்லுமூற்பூரணசோ தியிலென்னைப் பாரனவிற் காமணியெனவருளப்- பரிபூ ரணனே பள்ளியெழுந்தருளாயே-என்பதனுற்காண்க.

அ-கை. மேல்பரஸ்வப்நத்தை யுரைக்கின்ருர்.

கவி. புணர்ந்தவிச்சகத்தோர்ந்துணர்
போதமாந்தனேயே
உணர்ந்தமற்றதுபரகன
வெனுமடி யுணர்ந்தேன்

க-து- பரநனவதனிற் பகுத்துணர்தனேயும்
இரமுறவதுபர கனவென்றுரைத்தது

இ-ள், புணர்ந்தவிச்சகத்தோர்ந்து சூழ்ந்திரா நின்றந னவில்காட்சியை ஆராய்ந்து (உணர்போதமாந்தனேயே) அறிகின்றஅறிவாகியதன்னேயே(உணர்ந்தமற்றதுபரகன வெனும்படியுணர்ந்தேன்) அறிவும்றிருந்ததைப் பரகன வாகத்தரிசித்தேன்-எ-று—(உதாரணம்) காலமுஞா து ருஞானமுனேபமும் - கண்டனனென்னிலிராசதமாயை மேலொடுகீழ்பக்கம் விரவியபின் முன்விரிவுறு மவைப வமாயினவெல்லாம்-சாலவுமிரணிய கர்ப்பமுமிதுதான்- சதாசிவகாலபரன்கனவிதுவே- பாலுயர் காரண வுபாதி யென்றருளப்-பரிபூரணனே பள்ளியெழுந்தருளாயே.

அ-கை- மேல்பரசுழுப்தியையுரைக்கின்ருர்.

கவி, சான்றசாக்ஷியமிறந்திடந்
தானிருந்தமையும
தோன்றிடாவிடம்பரசுழுத்தி
யதெனத்துணிந்தேன்.

க-து. சாக்கிரமுதலாய்த்தன்னுணர்வினேயும்
• நோக்கிடாதகலம்பர சுழுத்தியாமென்றது

இ-ள், (சான்ற) யாவைக்குமேலாகச்சேஷித்து நி ன்ற சாட்சியும் (சாக்ஷியம்) அஞ்ஞானங்களைக் கடந் துநின்றசாக்ஷியமும் (இறந்தி-ம) அந்தமித்து உபச பமாகிய தானிருந்தமையும் தானிருக்கின்றதையும்



றிடாவிடம் பரசுழுத்தியதெனத் துணிந்தேன்) அறி யாத இடத்தைப் பரசுழுத்திபாக தரிசித்தேன்-எ-று. (இதன்பதசாரம்) தானேதானு யகண்டபரிபூரணமாய் சமஸ்தமு முணர்வுற்று எவற்றிற்கும்பொதுவாகவிரு ப்பதென்பார் சான்றென்றும் பூருவசஞ்சிதந்தோலைய விஷயேந்திரிய ரூபமா யாகாமிய நீங்கினுமென்றவா தனேயான அஞ்ஞானமுங் கடந்த உணர்வென்பார் சா க்கியமென்றும் சிதாபாசத்துவம் அத்தமித்து கூடஸ்த சைதன்னியமும் பிரமசைதன்னியமும் ஏகமானதென் பார் இறந்திடமென்றும் பெத்தத்திசையிற் சிற்றுண ர்வு முத்தித்திசையில் பேறறிவுமாகியதென்பார் - தா னிருந்தமையுந் தோன்றிடாவிடமென்றும் இரண்டாம் பாழென்பார் - பரசுழுத்தியென்றுங்கூறினர். (இதற் குக்காரணம்) நோக்கிமுன்வினையற நுகர்வுறவிடை ய நோக்குமிந்தியங்களின் போக்கறுத்தகத்தே தாக் கியவாதனே தன்னேயுந்தவிர்த்துத்-தமத்தினேக் கடத்து ணர் சாக்கியதாக்கி-சாக்கியசான்றுமத் தமித்து நின் றெளிருந் தற்சுருபமுமுப சமித்துனிலொன்றத்-தூக் கினனே சுருபானந்தச் சுடரே சுந்தரனேபள்ளியெழு ந்தருளாயே - என்றும் இதமகமறவிரு வினவமென்ற ருளி - எழில்பரசுழுத்திகார ணுதியற்றதுவாம்-அதீத மதிது வஜஹர்லட்சணேயதனுல் ஆசறுகொல்லுறு பா ழிரண்டாம்பாற்-பொதுவதுபுகவதுபோங்கடமன்றிப் போதமுமழுங்குமவ்வியாகிருதமிறுகல்-பதியுடல் சதா சிவ பராசத்தியருளப் பரிபூரணனே பள்ளியெழுந்தரு ளாயே என்பதனுற்காண்க. ௯௯

அ கை. மேல் பரதுரியத்தை உரைக்கின்றார்.

கவி. மரித்ததென் றுணர்ந்துரைத்ததும்
மரித்திடந்தனிலே
தெரிந்தபோதமேயதுபர
துரியமாய்த்தெளிந்தேன்.

க - து. ஊன்றிய நனவுட னுற்றது மூன்றும்
தோன்றிடாவிடம் பரதுரியமென் றுரைத்தது

இ-ள். "மரித்ததென் றுணர்ந்துரைத்ததும்,, இறந்த தென்றறிந்து வசனிக்கப்பட்டதும் "மரித்திடந்தனிலே,, இறந்தவிடமாகிய விடத்திலேனின்று "தெரிந்த போதமே,, அறிவித்த அறிவாகின்றதே "அதுபரது ரியமாய்த் தெளிந்தேன்,, தத்பதமாகிய துரியமென்ற றிந்தேன்-எ-று. (இதன்தாத்பரியம்) தற்போத இழ ப்பிலேநின்றவுணர்வு மதன்வாசனையாகிய வாக்குமா கியயிரண்டு மிறந்துளவிடமானந்தாதீதமென்பார், மரு த்ததென் றுணர்ந்துவாத்தது மரித்திடந்தனிலேயென் பதும் - அஃதினிலவசமுற்று அதுதானென்பது நான துவென்பது மற்றது தானேதானுவதென்பார் தெரி ந்தபோதமேயதுபர துரியமென் றுங்கூறினர். எ௫

அ கை. மேல்குருசாக்கிரத்தையுரைக்கின்றார்.

கவி. இறையெனும்பொருட்டுரியமே
என்னையாண்டவனே
மறையினந்தநற்பதப்பொரு
ளனவெனமதித்தேன்.

க - து. முப்பதமுடிவினில் மூலகாரணமதாம்,
நற்பொரு ளனவென நாடியுரைத்தது.

இ-ள். "இறையெனும்பொருட்டுரியமே,, யாதுக்கு



னையாண்டவனே அடியேனை, அடிமை காண்டாண்ட ருளும்பொருட்டு திருமேனிகொண்டெழுந்தருளுக்கு ருநாத மறையினந்தநற்பதப் பொருளனவென மதித் தேன் வேதமுடிவாகிய சுத்தப்பார்த்தமே குருசாக்கி ரமாக நிச்சயித்தறிந்தேன்-எ-று. குருவே பிரமம்பிர மமே குருவென்பார் இறையெனும் பொருட்டுரியமே யென்னையாண்டவனேயென் றுகூறினா. 'உதாரணம், அருவமுமுருவமுமாகியபொருளே அதீதமென்றருளி ய வழித்தது வறிந்த-பொருளுணர்வதுப்ரம் விசிட்ட வாக்கியவதால்-பொருவில்சிற்சொலிதைதற்பதப்பொ ருளதுவாம் இருநிலனெனமுத லருளியபரிசே-எழில் ருபூரணத் தியல்குருநனவில்-பரமுரவென்றெழுபவம றுத்தருளப் பரிபூரணனே பள்ளியெழுந்தருளாயே எ ன்பதனாற்காண்க. சுஅ

அ கை. மேல்குருஸ்வப்நத்தையுரைக்கின்றார்.

கவி. பண்டைவிச்சுவவாதனைப்
பழுதுபோய்முழுதும்
கண்டகண்ணதோயாய்வக்
கனவதுங்கண்டேன்.

க - து. தாமுயிர்பாவையுந் தானுய்நிறைபரம்
பிரகாசங்குரு கனவென் றுரைத்தது.

இ-ள். "பண்டை,, பூருவந்தோற்றுகின்ற விச்சுவ ம் உலகாதிகளினது "வாதனை,, துன்பமாகின்ற பழு துபோய் குற்றநீங்கி 'முழுதும், அசேஷமும் கண்ட முடியைப்போலறிவுற்று நின்ற கண்ணதேபாய இட மயாகின்ற 'கனவதுங்கண்டேன், குருஸ்வாப்நத்தை

யுந் தரிசித்தேன்-எ-று. காரணோபாதிகழன்று விளங்கானின்ற தத்ஸ்வரூபமே விஸ்வக்கிராசம் பண்ணியதென்பார் புண்டைவிச்சுவவாதனைப் பழுதுபோயென்றும் காரிய காரணவுபாதி அசேஷமும் அறிகின்ற அறிவு ஆடியிற் காட்சிபோலென்பார் - முழுதுங்கண்ட கண்ணதேயாயவக் கனவென்றுங்கூறினர் உதாரணம் மலமறுகுருபதகனவினின்மருவு மாசறுமாணவசாத்திகமதனல் உலகமோ டியிருந்தன்மாத்திரபரமா உணர்ந்ததுவே பிரசாபத்திய மென்றருளி - நிலவியபரமமதாயவைமுழுதும் நிகழ்ந்ததின்றெற்கென நெடியவர்முதலே பலவுலகுண்டது மிதுவெனவருளப்பரிபூரணனே பள்ளியெழுந்தருளாயே என்பதனற் காண்க.

கசு

அ கை. மேல்குருசுழுப்தியை உரைக்கின்றார்.

கவி. காட்சிபாவையுங்கண்ணதா
வக்கணுங்களைந்து
மாட்சியாகியவகோசர
முறக்கமாய்மதித்தேன்,

க - து. கட்டமிலாதறி மண்ணிறு லொன்றும்
சுட்டிலாவதுவே சுழுப்தியென் றுரைத்தது.

இ-ள். கண்ணதா பார்வைக்குறியதாக காட்சி யாவையும் கண்டறிகின்றதாகிய அசேஷமும் அக்கணுங்களைந்து அந்தப்பாவையுங் களைவுற்று மாட்சியாகியவகோசரம் மனவாக்குகளாலறியவொண்ணாதபெருமையை உறக்கமாய்மதித்தேன் ஆதியந்த சூனியமாக தரிசித்தேன்-எ-று. தேவதத்தனைநோக்கி அவனேயிவனுய் அக்காலமிக்காலம் நோக்கிக்கண்டதென்பார்.

மைய.



காட்சியாவையுங்கண்ணதாவென்றும் உபாதிகளைநீக்கி ஒருவனைநோக்கவென்பார் அக்கணுங்களைந்தென்றும் ஆதியந்தசூனியமா யளவிடப்படாததாய் ஞானந்தபூரணமென்பார் மாட்சியாகிய அகோசர முறக்கமாய் மதித்தேனென்றுங்கூறினர். இதற்குதாரணம் புள்ளியெழுச்சி சேரணிஜகதஜகர்லட்சணையதனற் செகமுழுதுண்டதோர் செருக்கறமிசவே ஏர்குருசுழுப்தியிலிருந்துபசாந்தம் இருபதப்பொருளுமொன்றாக்கிநின்றொளிர ஒருகடவுயிரறியொண்பாமுழுதும் ஒன்றுமுப்பாழுமைபிநந்திடமதுவாய் பாரியல்சமைவுநற்பிருதிவியென்றருளப் பரிபூரணனே பள்ளியெழுந்தருளாயே என்பதனற்காண்க ஜஹதஜகர்லட்சணையென்பது விட்டுவிடாதலட்சணை இஃதை மூன்றுவதுபாமெனவறிக.

ா

அ கை. மேல்குருதுரியத்தையுரைக்கின்றார்.

கவி. அருந்தவாமறைக்கந்தமா
மகோசரந்தனினீ
இருந்தவாறறிவித்தவா
றெங்ஙனமிசைக்கேன்.

க - து. சுருதிமுடியுறை சுவாநுபவமாம்
குருவருள்கோசரங் கூட்டியதுரைத்தது.

இ-ள். "அருந்தவ" அரியதவமயமாகிய குருமூர்த்தியே 'மறைக்கந்தமா மகோசரந்தனில்' வேதத்தினந்தமா யறியவொண்ணாத விவரந்தனில் நீயிருந்தவாறு, தேவரீரிருக்கின்ற வியல்பினை அறிவித்தவாறெங்ஙன மிசைக்கேன் அடியேனுக்கு தெரியச்செய்தநியாயத்தை எவ்விதமாகச்சொல்லுவேன் - எ - று,

அனைத்துமாயனைத்து மிலதாயிருக்கின்றதன்னைத்தன் னிடத்துத் தானாயிருந்துவிளக்கி அரிய தவப்பயனாற் பெறும்பேறே தாமாய் நிறைந்ததென்பார், அருந்த வாவென்றும் சுருதிமுடிவுமறிதற்கரிய முப்பாழுங்க டந்த சூன்யமென்பார் மறைக்கந்தமா மகோசரந்தநி லென்றும் - துரியசம்பூரணமௌனானந்த ஸ்வாநுபூதி யை விழியாலறிவித்ததென்பார் நீயிருந்தவா றறிவித் தவா றெங்ஙனமிசைக்கே னென்றுங்கூறினார். இவை யனைத்துஞ் சற்குருவருளாலுணர்க. ௱க

கவி. எம்பிரானிடந்தொறு
மிடந்தொறுமதுவதுவாய்
தம்பிரானடஞ்செயுமவகை
சாற்றுமாறறியேன்.

க - து. எவ்விடம்பார்க்கினு மவ்விடமதுவாய்ச்
செவ்வியோனின்றது செப்பரிதென்றது.

இ-ள். 'தம்பிரான், எப்பொருட்குமேலாகிய கடவு ளே 'எம்பிரான், எமதிறைவனே 'இடந்தொறுமிடந் தோறும, எவ்வெவ்விடங்களை நோக்கினும் 'அதுவ துவாய், அவ்வவ்விடங்களுக்குத்தகுந்த அருவதுவாய் 'நடஞ்செயும்வகை, தேவரீர்நடக்கின்ற கூறுபாட் டினை சாற்றுமாறறியேன் உரைப்பதற்கு வகையறி கின்றிலேன் எ-று தனதுடல் பொருளாவி மூன்னை றயுங் கையேற்றடிமைகொண் டிரட்சிக்குந்தேசி கோ த்தமனே யென்பார், எம்பிரானென்றும் - ஜீவசாக் ராதி குருதுரியாந்தமென்பார், இடந்தொறு மிடந் தொறுமென்றும், நனவாதி துரியாந்தங்களில் அதற் கதற்குரிய வியல்பாய் நின்றவென்பார் அதுவதுவா



யென்றும் பிரமாதிஸ்தம்பாந்தந் தானாய் விளங்குவ தை யுரைப்பது வாங்மான சகோசரமென்பார் நட ஞ்செயும் வகைசாற்று மாற்றியேனென்றும் கூறினார்

அ கை, மேல்சீடனது விண்ணப்பம் அருளிச் செய்கின்றார்.

கவி. ஆவியேயடியேன்செய்கை
மாறுளவெனினும்
பாவியேனதுதானுமுன்
னுடையதாம்பண்டே.

க - து. அடிமை கைமாறினுக் காவியோ டெல்லாம்
உடையநீயெனக் கொன்றுண்டோ வென்றது

இ - ள். ஆவியே உயிருக்குயிராய் நின்ற ஐயனே அடியேன் செய்கை மாறுள வெனினும் அடிமை செய்யவேண்டிய கைமாறுண்டாயிருக்கின்ற தென்று செய்யவேண்டிய கைமாறுண்டாயிருக்கின்ற தென்று னும் பாவியேன் வேறாகப் பாவிக்கின்றிலேன் அதுதா னு முன்னுடைய தாம்பண்டே யான்பாவிக்கின்ற அப் பொருள்களும் முன்பே அத்தேவரீருக்குரிய பொரு ளாம்-எ று. சாரம்-ஆசாரியர்பிறவாநெறியை அநுக்கி ரகஞ்செய்ததற்குசிஷன்குருதெக்ஷிணைசெய்வதியல்பெ ன்றார் அடியேன்செய்கைமாறுளவெனினுமென்றும் உ டல்பொருளாவிமூன்றும்அடிமைகொண்டவன்றேகை க்கொண்டபின்பு தனக்கோர்சுதந்தரமின்றென்பார்பா வியேனதுதானு முன்னுடைய தாம்பண்டே யென்று கூறினார். ௱௨

கவி. ஆவல்செய்தனதாக்கை
யுள்ளளவுநின்னடியார்க்
கேவல்செய்யவதேயன்றி
மற்றொன்றுமாறறியேன்.

ம...
...

க - து. நின்னடியார்க் கேவல் நேசிப்ப தல்லது
மன்னுகைமாறுவே றிலையென் றுரைத்தது.

இ - ள். (எனதாக்கை யுள்ளவு நின்னடியார்க் கேவல்செய்து அடியேனது தேகமுள்ளளவுந்தேவரீர்திருவடிபடியாரிடத்திலன்புதாங்கி (ஏவல்செய்லதேயன்றிமற்றொன்றுமாறறியேன் பணிவிடை செய்கின்ற தேயல்லது வேறொன்றுங்கைமாறுசெய்ய அறியேன்எ-று இதற்குதாரணம் சூதகீதை)பரம்பொருடானுந் தேசிகர்தமக்குப்பணிசெய்வோரபணிசெய்யும்யோகி அரன் றிருமால் மற்றுளதெய்வந்தனினும் அதிகமாந் தெய்வமிங்கென்னல் தெரிந்தவன்மகிமை செப்பொணாதவன் ருட்பணிசெய்வோர்பதங்களென்கிரகத்தில்திருந்தவைத்துவப்பேனயலொருதெய்வமுண்டெனச்சிந்தனை செய்யேன் என்பதனாற்காண்க. ௱௪

கவி. இறவிலெப்பதமும்பெற
வேண்டிலேனென்றும்
பிறவிவேண்டுவனின்றிருப்
பணிசெயப்பெறினே.

க - து. எற்பவமாறினேற் குற்பமுறுமெனின்
நிற்பணியெப்பவுநேடுவனென்றது.

இ - ள்.(பிறவி சநநத்தையும் (இறவி லெப்பதமும் பெறவேண்டிலேன்) லயமில்லாத எத்தன்மைப் பட்டபதத்தையும் பெற்றுக் கொள்ள விச்சித்து வேண்டுகின்றிலேன்(பிறவி பெறின்) அதவாசநநம் வருமாகில் (என்றுநின்றிருப்பணிசெய்துகொண்டிருக்கத்தக்கதாகவேண்டுவன்-எ-று. பிறவியென்றதைஇரண்டிடத்துங்கூட்டுக, ௱௫



அ - கை, மேல்மாணுக்கன் ஆராமையை அருளிச்செய்கின்றார்

கவி. என்றுபலகால்விழுமெழுந்தொரு
மழும்புரிவதென்னையினியான்
றின்றுபலவாகவுரைசெய்யுமவ
னன்பினொடுநெஞ்சுருகியே.

க - து. அன்பினாலுருகுமெய்யானந்தமேலிடத்
துன்பிலிமத்தர்போற் றொழுதனனென்றது

இ - ள். (அவனவன்பினொடுநெஞ்சுருகி) அந்தச்சசிவர்ணன் அன்பினோடும் அனலைக்கண்டநவநீதம்போலமனதிளகி(பலகால்விழுமெழுந்தொழும்) அனேகந்திரமாகவணங்கிவிழுவான் எழுந்துநிற்பான் திரும்பவும் வந்தனஞ்செய்வான் (யானினிப்புரிவதென்னை யென்றழும்) அடியேனினிச்செய்யத்தக்கவையென்னை யிருக்கின்றதென்று கண்ணீரோடும்படி அழுதுபுலம்புவான் நின்றுபலவாகவுரைசெய்யும் அஞ்சலிஅத்தனாகநின்றுகொண்டு அநேகவிதமாகத் தோத்திரஞ் செய்வான் எ - று. ௱௬

அ - கை. மேல் குருகடாக்ஷவல்லபம் புகழ்ந்தருளிச் செய்கின்றார்.

கவி.எட்டிலறிவின்றியிறைதன்னிலறி
வின்றியிவ்வுடம்பினுடனே
விட்டிலுறைவானையினிவீடுபெறு
மென்பதுவிலம்புகிலனே.

க - து.பிறவாநெறிபெருமைசெய்சிடன்
இறவாப்பெருமையையியம்பொணா தென்றது

இ - ள்.(எட்டிலறிவின்றி) சாஸ்திரவாசனையு மற்று (இறைதன்னிலறிவின்றி) ஈஸ்வரவாசனையுமற்று (இவ்

வுடம்பினுடனே) இந்தப்பஞ்சபூதகாரியமாகியதேகத்தோடுதானே[வீட்டினுறைவான்றனை நிரதிசயானந்தமோக்ஷவீட்டில் இரண்டறக்கலந்திருக்குஞ் சசிவர்ணனை (இனிவீடுபெறுமென்பது) தேகாந்தத்தில்மோக்ஷத்தைப்பெறுவா னென்பதை(விளம்புகிலன்)அளவுபடுத்திச்சொல்லமாட்டேன்-எ-று. ௱எ

அ - கை,சசிவர்ணன் பிதுர்க்களடைந்த நற்கதிரைக் கூறுகின்றார்,

கலி. வஞ்சவலியானரகின்வாழ்பிதிர்கள்
பாழ்படுவதாகவருளின்
விஞ்சைவலியாலடையவேறினர்
சுராதிபர்கண்மேலுலகமே.

க - து,நரகம்விட்டிவன் முன்னோர்நரகவாழ்வுற்றன
பிரமஞானத்திற்பெருமையாலென்றது.

இ - ள்.(வஞ்சவலியா னரகின்வாழ் பிதிர்கள்)கொடுமையினது வலிமையினால் நரகத்தில்வீழ்ந்து கிடந்தவிவன்குலத்துப் பிதிர்களனைவரும் (அருளின் விஞ்சைவலியால் பாழ்படுவதாக)அருள்விளங்கிய பரஞானத்தினது வலிமையினால் நரகம் பாழடைவதாகும்படி (அடையவேறினர்) சுராதிபர்கள்மேலுலகமே) எல்லவரும்நரகக்கரையிலேறி தேவர்கட்குரிய சுவர்க்கலோகத்திருத்துவாழ்கின்றனர் எ-று. ௱அ

அ - கை மேல் சசிவர்ணன் பெருமையை அருளிச்செய்கின்றார்.

கலி தேவருமனித்தருமிவன்றொழில்வியந்
துரைசெயத்தகுவதோ
மூவரும்விளம்பமுடியாதிவன்
தேவல்செயமுந்துறுவரோ



க - து.பொருந்திவன்குரு பணிபுகழ்ந்து தேவர்கணர்திருத்துமூர்களுரைசெயவரிதென்றது.

இ - ள்.(இவன்றொழியில் வியந்து மூவரும் விளம்பமுடியாது) சசிவர்ணன் குருபணிவிடைத் தொழிலினதருமையை அதிசயித்து மும்மூர்த்திகளாலுஞ் சொல்லமுடியாது தேவருமனித்தருமுரைசெயத் தகுவதோ தேவர்களாலுமனிதர்களாலும்வியந்து சொல்லமுடியுமா இவனதேவல்; செயமுந்துறுவரோ சசிவர்ணனுக்கு பணிவிடை தாங்கள் செய்வதற்குஎனக்குமுந்தவெனக்குமுந்தவென்று வந்துபொருந்துவார்கள்எ-று. ௱கூ

அ கை,மேல் ஞானவானது பெருமையை அருளிச்செய்கின்றார்,

கலி. ஞானியைநான்சுரனெனுதொழிக
ஞாலமுயநாதனருளால்
மேனியதுகொண்டுதனைநல்கவரு
மென்றறையும்வேதமுடிவே.

க - து. நான்சுரன்ஞானிரனென்பதுநன்றல
பிரமமேஞானியம் பேதமென்றெனபது.

இ - ள்.(ஞானியைநான் சுரனெனுதொழிக) பரஞானிகளை மனிதனென்றுந்தேவனென்றுஞ்சொல்லுகின்ற சொற்களைநீக்குக்-அஃதேனெனில்ஞாலமுயநாதனருளால் உலகங்கடத்தேறும்பொருட்டு (பரமே தமது காருண்யத்தினாலே) மேனியதுகொண்தேனைநல்கவருமென்று(மானிடவுரு வமாகத் திருமேனிகொண்டு தம்மைக்கெடுத்தருளவருமென்று வேதமுடிவறையும்வேதாந்தங்களெல்லாமவசனிக்கும் எ - று.(இதற்குதார

ணம்-சூதகீதை)கனவினிநிற்ககாணுங்காட்சிபோற்சக
த்தைக் காணுமெய்ஞானிகடம்மைமனுடனே வன்றித்
தேவனென்றேணணுமனநினைவிருத்தியைமாற்றிஇனை
யனபரம சிவனுருக்கொண்டிவ் வுலகுயவெழிந் தருளி
னனென்-றனையவை நினைப் போருத்தமரல்லோ ராடி
யைநோக்குமந்தகரேஎன்றும்(பாடுதுறை)முகுந்தனு
நாலுமுகந்தேட-மூலமொருகுருமூர்த்தியாகிப்புகுந்த
டியார்தொழவீற்றிருக்கும் பூங்கோயிலாக நான்பெற்
றிலேனே என்பதநுற்காண்க. ௬௰

சசிவர்ணபோதம்.

முற்றிற்று.

---